கடவுள்துணை.

# குதம்பைச்சித்தர் பாடல்.

இஃது

வேதகிரி ஐயரால்

அரும்பத அகராதியுடன்

பிழையறப்பரிசோதிக்கப்பட்டு



சென்னபட்டணம்

பாப்பன் சாலை, வாணிஅரங்க அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1886-வருடம்

# முகவுரை.

வாசிப்பவர்களுக்கு பிசகில்லாமற்படி சரியானபாடத்தை யெடுத்துக்காட்டி அதிலுள்ள அரும்பதங்களுக்கு அர்த்தத்தைத்தரும் அகராதியையும் சேர்த்து அஞ்ஞான இருளாலும் பொய்யான உபதேசத்தாலும் கெடுக்கப்பட்ட என் தேசத்தாராகிய உங்களுக்கு இந்த ஞானசாஸ்திரத்தின் உண்மை விளங்கவேண்டும் என்றே குதம்பைச் சித்தர்பாடல் என்னும் இப்புத்தகம் புதிதாய் அச்சிடப்பட்டது. ஓர் கிரந்தத்தை வாசிப்பதின் நோக்கமென்னவெனில் அதிலுள்ள புத்திமதிகளையறிந்து அவ்வாறு நடக்கவேண்டியது. நாம் இப்புத்தகத்தை வாசித்து அறிந்துக்கொள்ளவேண்டியதாவது :—

க. கடவுள் ஒருவரே.

உ. அவரையே தொழவேண்டும்.

ந. விக்கிரகாராதனைக்காரருக்கு மோட்சமில்லை.

ச. கடவுளுக்கு விரோதமானது எதுவும் பாவமெனப்படும்.

ரு. நமது செய்கைகளினாலல்ல, கடவுளுடைய கிருபாகடாட்சத்தினாலேயே நமது பாவம் நிவிர்த்தியாகும்.



௬. அவர் கிருபையைப்பெறுவோமானால் அதுவே நம்மைச் சகல துன்மார்க்கம் பாவம் முதலிய தீமைகளினின்றும் நீக்கி மோட்சத்தில் சேர்க்கும்.

௭. ஆண், பெண், என்கிற இரண்டுதவிர வேறே ஜாதியில்லை. இப்படிக்கல்லாமல் உயர்ந்தஜாதி தாழ்ந்தஜாதியென்று சொல்வது புத்தியீனம்.

மேற்சொல்லியபடி கடவுளை நாம்விசுவாசித்து நேசிக்கும்போது தான், மனிதராகிய நமக்குள்ளும் சகோதர விசுவாச நேசமுண்டாகும். நாம் குறைவில்லாமல் நிறைவோடு இருக்கும்பொருட்டு கடவுள் இவ்வித ஞானியை நமக்கு அருளினபடியால் குதம்பைச்சித்தர் பாடல்என்னும் இந்த ஞானசாஸ்திரத்தை சிரத்தையுடன்படித்து அதிலுள்ள உண்மையை நாம் ஏற்றுக்கொள்ளவேண்டும்,



கடவுள்துணை.

# குதம்பைச்சித்தர் பாடல்.

## நேரிசைவெண்பா.

உலகி லஞ்ஞான மொழிந்திட யார்க்கும்
இலகுங் கடவுளை யேத்தி - நலமார்
குதம்பாய் மெஞ்ஞானங் கூறுவேனன்கு
நிதம் பார்த்து நெஞ்சினினை.

## கடவுள் வணக்கம்.

1. பூரணங் கண்டோரிப் பூமியிலேவரக்
காரணமில்லையேடி - குதம்பாய் - காரணமில்லையேடி.
2. போங்கால நீங்காற்பூரணங் கண்டோர்க்குச்
சாங்காலமில்லையேடி - குதம்பாய் - சாங்காலமில்லையேடி.
3. செத்துப்பிறக்கின்ற தேவைத்துதிப்போர்க்கு
முத்திதானில்லையேடி - குதம்பாய் - முத்திதானில்லையேடி.
4. வஸ்துத்தரிசன மாட்சியாய்க் கண்டோர்க்குக்
கஸ்திசற் றில்லையேடி - குதம்பாய் - கஸ்திசற்றில்லையேடி.
5. பற்றறவஸ்துவைப் பற்றறக் கண்டோர்க்குக்
குற்றங்களில்லையேடி - குதம்பாய் - குற்றங்களில்லையேடி.

6. காட்சிய காட்சி கடந்தபிரமத்தைச்
சூட்சியாய்க்காணேடி - குதம்பாய் - சூட்சியாய்க்காணேடி.

7. வெட்டவெளிக்குள் வெறும்பாழாய் நின்றதை
இட்டமாய்க்காணேடி - குதம்பாய் - இட்டமாய்க்காணேடி.

8. எங்கு நிறைந்தே யிருக்கின்ற சோதியை
அங்கத்துட்காணேடி - குதம்பாய் - அங்கத்துட்காணேடி.

9. அண்டத்துக்கப்பா லகன்றசுடரினைப்
பிண்டத்துட்காணேடி - குதம்பாய் - பிண்டத்துட்காணேடி.

10. ஆவித்துணையாகு மாராவமுதத்தைச்
சேவித்துக்கொள்ளேடி-குதம்பாய்-சேவித்துக்கொள்ளேடி.

11. திண்டாவிளக்கினைத் தெய்வக்கொழுந்தினை
மாண்டாலும் போற்றேடி - குதம்பாய் - மாண்டாலும்போ-
ற்றேடி.

12. அண்டமும்பிண்டமு மாக்கியதேவனைத்
தெண்டனிட்டேத்தேடி-குதம்பாய்-தெண்டனிட்டேத்தேடி.

13. எந்தைபராபர வஸ்தினினையடி
சிந்தையிற்கொள்ளேடி-குதம்பாய்-சிந்தையிற்கொள்ளேடி.

14. விண்ணொளியாக விளங்கும் பிரமமே
கண்ணொளியாகுமேடி - குதம்பாய் - கண்ணொளியாகுமேடி.

15. பத்திசற்றில்லாத பாமரபாவிக்கு
முத்திசற்றில்லையேடி - குதம்பாய் - முத்திசற்றில்லையேடி.

16. எல்லாப் பொருளுக்கு மேலானவென்றேவைச்
சொல்லாமற் சொல்லேடி - குதம்பாய் - சொல்லாமற்சொ-
ல்லேடி.

17. எந்தவுயிர்க்கு மிறைதரு மீசனைச்
சந்ததம்வாழ்த்தேடி - குதம்பாய் - சந்ததம்வாழ்த்தேடி.
18. காணக்கிடையாத கற்பாந்தகம்பத்தை
நாணமற்றேத்தேடி - குதம்பாய் - நாணமற்றேத்தேடி.
19. அணுவாய்ப் பல்லண்டமாயான சிற்சோதியைத்
துணிவாய்நீபோற்றேடி-குதம்பாய்-துணிவாய்நீபோற்றேடி
20. மாணிக்கக்குன்றிற்கு மாசற்றசோதிக்குக்
காணிக்கை நன்மனமே - குதம்பாய் - காணிக்கைநன்மனமே.

## கடவுள்வல்லபங்கூறல்.

21. தேவருஞ்சித்தருந் தேடுமுதலவர்
மூவரு மாவாரேடி - குதம்பாய் - மூவரு மாவாரேடி.
22. சத்தாகிச் சித்தாகித் தாபரசங்கமாய்
வித்தாகும்வஸ்துவேடி - குதம்பாய் - வித்தாகும்வஸ்துவேடி
23. உருவாயருவா யொளியாய் வெளியாய்த்
திருவாகிநின்றதுகாண் - குதம்பாய் - திருவாகிநின்றதுகாண்
24. நீரும் நெருப்பு நெடுங்காற்று வானமும்
பாருமாய் நின்றதைக்காண் - குதம்பாய் - பாருமாய் நின்ற
தைக்காண்.
25. புவனமெல்லாங் கணப்போதேயழித்திடச்
சிவனுலேயாகுமேடி - குதம்பாய் - சிவனுலேயாகுமேடி.
26. அவனசையாவிடி லணுவசையா தென்றல்
புவனத்திலுண்மையேடி - குதம்பாய் - புவனத்திலுண்மை
யேடி.

27. காரணஞ் சித்தென்றுங் காரியஞ்சத்தென்றும்
ஆரணஞ் சொல்லுமேடி - குதம்பாய் - ஆரணஞ் சொல்லு
மேடி.

28. காரணமுன்னென்றுங் காரியம்பின்னென்றுந்
தாரணிசொல்லுமேடி - குதம்பாய் - தாரணிசொல்லுமேடி.

29. ஆதிசகத் தென்றநாதி மகத்தென்று
மேதினிகூறுமேடி - குதம்பாய் - மேதினிகூறுமேடி.

30. ஐந்துதொழிற்கு முரியோன நாதியை
மந்திரம்போற்றுமேடி - குதம்பாய் - மந்திரம்போற்றுமேடி.

31. யானைதலையா யெறும்பு கடையாய்ப் பல்
சேனையைத் தந்தானேடி - குதம்பாய் - சேனையைத் தந்தா
னேடி.

32. மண்ணளவிட்டாலும் வஸ்துபெருமைக்கே
எண்ணளவில்லையேடி - குதம்பாய் - எண்ணளவில்லையேடி.

33. ஆதியுமந்தமுமான வொருவனே
சோதியாய் நின்றானேடி - குதம்பாய் - சோதியாய் நின்றா
னேடி.

34. சிவனும்புத்தியுஞ் சித்தமுந்தந்தவன்
தேவனவனுமேடி - குதம்பாய் - தேவனவனுமேடி.

35. சத்தஞ்சுயம்பு சுகுணஞ்சம்பூரணஞ்
சத்தியமுள்ளானேடி - குதம்பாய் - சத்தியமுள்ளானேடி.

36. எங்கும் வியாபக மீகைவிவேகங்கள்
பொங்கமா யுள்ளானேடி - குதம்பாய் - பொங்கமா யுள்ளா
னேடி.

37. நீர்க்கவாகாயந் தெரியாத தன்மைபோல்
பார்க்கப்படா தானேடி - குதம்பாய்-பார்க்கப்படா தானேடி
38. ஆத்துமந்தன்னை யருபமாயெண்ணினுய்
கூத்தனவ்வாறல்லவோ-குதம்பாய் - கூத்தனவ்வாறல்லவோ
39. அண்டத்தைத்தேவனுளிக்க வெண்ணும்போதே
அண்டமுண்டாயிற்றேடி - குதம்பாய் - அண்டமுண்டாயிற்றேடி.
40. வானமுற்றுக வளர்ந்திடு சின்னங்கள்
தானவர் செய்தாரேடி - குதம்பாய் - தானவர்செய்தாரேடி.
41. ஒன்றுமில்லா வெளிக்குள்ளே டல்லண்டத்தை
நின்றிடச்செய்தானேடி-குதம்பாய்-நின்றிடச்செய்தானேடி.
42. கருவிகளில்லாமற் காணும்பல்லண்டங்கள்
உருவுறச்செய்தானேடி-குதம்பாய்-உருவுறச்செய்தானேடி.
43. எல்லாவுயிர்களு மெந்தவுலகமும்
வல்லானைப்போற்றுமேடி - குதம்பாய் - வல்லானைப்போற்றுமேடி.
44. என்றுமழியாமை யெங்குநிறைவாகி
நின்றது பிர்மமேடி - குதம்பாய் - நின்றது பிர்மமேடி.
45. கண்டத்தையாள்கின்ற காவலர்பொற்சோதி
அண்டத்தை யாள்கின்றதே - குதம்பாய் - அண்டத்தை யாள்கின்றதே.
46. அண்டமுண்டாகு முன்னுகவநாதியாய்க்
கண்டதுபிர்மமேடி - குதம்பாய் - கண்டதுபிர்மமேடி.
47. எந்தவுயிர்கட்கு மெந்தவுலகிற்கும்
அந்தமாய்நின்றுனேடி - குதம்பாய் - அந்தமாய்நின்றுனேடி.

48. தணிவானபுத்தியாற் முணுவறியாதோர்
அணுவேனு மில்லையேடி - குதம்பாய் - அணுவேணு மில்லை
யேடி.

49. மூன்றுதொழிலினை மூர்த்திசெய்யாவிடில்
தோன்ருதுலகமேடி - குதம்பாய் - தோன்ருதுலகமேடி.

50. சிரானதேவன் சிறப்பினைச்சொல்லவே
யாராலேயாகுமேடி - குதம்பாய் யாராலேயாகுமேடி.

## முத்தி நிலைபெறும் வழி.

51. எல்லார்க்கு மேலான வேகனைப் பற்றிய
வல்லார்க்குமுத்தியேடி-குதம்பாய்- வல்லார்க்குமுத்தியேடி.

52. பற்றற நின்ருனைப் பற்றறப்பற்றிடக்
கற்ருர்க்குமுத்தியேடி - குதம்பாய் - கற்ருர்க்குமுத்தியேடி.

53. பந்தத்தை விட்டொளிர் பந்தத்தைப்பற்றினுல்
சந்ததமுத்தியேடி - குதம்பாய் - சந்ததமுத்தியேடி.

54. ஆமைபோலைந்து மடக்கித்திரிகின்ற
ஊமைக்குமுத்தியேடி - குதம்பாய் - ஊமைக்குமுத்தியேடி.

55. மந்திமனதை வசப்படுத்திட்டார்க்கு
வந்தெய்துமுத்தியேடி - குதம்பாய் - வந்தெய்துமுத்தியேடி.

56. அந்தக்கரண மடங்க வடக்கினுல்
சொந்தம் பிரமமேடி - குதம்பாய் - சொந்தம் பிரமமேடி.

57. தாய்க்குச்சரியான தற்பரற்சார்ந்திடில்
வாய்க்கும் பதவியேடி - குதம்பாய் - வாய்க்கும் பதவியேடி.

58. சுத்தபிரமத்தைத் தொந்தமென்ருெட்டினுல்
சித்திக்குமுத்தியேடி - குதம்பாய் - சித்திக்குமுத்தியேடி.

59. கன்றை விடாது செல் கற்றாவைப்போல் வஸ்தை
ஒன்றினால்முத்தியேடி - குதம்பாய் - ஒன்றினால்முத்தியேடி

60. கைக்கனிப்போலவே காசறுபிர்மத்திற்
சொக்கினால் முத்தியேடி - குதம்பாய் - சொக்கினால் முத்தி
யேடி.

61. நித்தியவஸ்துவை நீங்காது நாடினால்
முத்திதான்சித்திக்குமே-குதம்பாய்-முத்திதான்சித்திக்குமே.

## தேகத்தைப் பழித்தல்.

62. பேசருநாற்றம் பெருமிம்முடலுக்கு
வாசனையேதுக்கேடி - குதம்பாய் - வாசனையேதுக்கேடி.

63. துர்க்கந்தமாய்மலஞ் சோருமுடலுக்கு
நற்கந்த மேதுக்கேடி - குதம்பாய் - நற்கந்த மேதுக்கேடி.

64. நீச்சுக்கவிச்சது நீங்காமெய்க்குமஞ்சள்
பூச்சுத்தானேதுக்கேடி - குதம்பாய் - பூச்சுத்தானேதுக்கேடி.

65. சேலைமினுக்கதுஞ் செம்பொன்மினுக்கதும்
மேலைமினுக்காமேடி - குதம்பாய் - மேலைமினுக்காமேடி.

66. பீவாசமுள்ளவுன் பீறலுடம்புக்குப்
பூவாசமேதுக்கேடி - குதம்பாய் - பூவாசமேதுக்கேடி.

67. போராட்டஞ்செய்து புழுத்தவுடம்பிற்கு
நீராட்டமேதுக்கேடி - குதம்பாய் - நீராட்டமேதுக்கேடி.

68. சீயுநிணமுந் திரண்டவுடம்பினை
ஆயுவதேதுக்கேடி - குதம்பாய் - ஆயுவதேதுக்கேடி.

69. காகங்கழுகளித் துண்ணுமேனிக்கு
வாகனமேதக்கேடி - குதம்பாய் - வாகனமேதக்கேடி.

70. கோவணத்தோடே கொளுத்துமுடலுக்குப்
பூவணையேதுக்கேடி - குதம்பாய் - பூவணையேதுக்கேடி.

## மாதரைப் பழித்தல்.

71. நெடுவரைபோலவே நீண்டகனதனம்
நடுவாகவந்ததேடி - குதம்பாய் - நடுவாகவந்ததேடி.

72. கையாலணைப்பது போலவுனதுகண்
மையாலழைப்பதென்னே - குதம்பாய் - மையாலழைப்ப
தென்னே.

73. முதிர்ந்தசுடுகோட்டில் முல்லையையொத்தபல்
உதிர்ந்துகிடக்குமேடி - குதம்பாய் - உதிர்ந்துகிடக்குமேடி.

74. கழறுங் கிளிமொழி காலஞ்சென்றாலது
குழறியழியுமேடி - குதம்பாய் - குழறியழியுமேடி.

75. வளர்ந்துமுறுக்காய் வயதிலெழுந் தனம்
தளர்ந்துவிழுந்திடுமே - குதம்பாய் - தளர்ந்துவிழுந்திடுமே.

76. பொருக்கின்றி மேனியிற் பூரித்தெழுந்ததோல்
சுருக்கம்விழுந்திடுமே - குதம்பாய் சுருக்கம்விழுந்திடுமே.

77. கொள்ளையதாகக் கொழுத்தே யெழுந்தகண்
நொள்ளைய தாய்விடுமே - குதம்பாய் - நொள்ளைய தாய்
விடுமே.

78. மஞ்சுபோலாகி வளர்ந்திடுங்கூந்தலும்
பஞ்சுபோலாயிடுமே - குதம்பாய் - பஞ்சுபோலாயிடுமே.

79. பொன்னுலேசெய்யாடி போன்றவுன்கன்னங்கள்
பின்னுலேயொட்டிவிடும் - குதம்பாய் - பின்னுலேயொட்டி
விடும்.

80. நல்லாயுன்னங்கமு நன்குநிமிர்ந்தாலும்
வில்லாய்ப்பின்கூனிவிடும் - குதம்பாய் - வில்லாய்ப்பின்கூனி
விடும்.

81. முந்திநடக்கின்ற மொய்ம்புஞ்சின் னுளையில்
குந்தியிருக்கச்செயும் - குதம்பாய் - குந்தியிருக்கச்செயும்.

82. பிறக்கும்போதுற்ற பெருமையைப்போலவே
இறக்கும் போதெய்துவிடும் - குதம்பாய் - இறக்கும்போதெ
ய்துவிடும்.

## நரக நிலைமை.

83. கோபம்பொருமை கொடுஞ்சொல்வன் கோளிவை
பாபத்துக்கேதுவேடி - குதம்பாய் - பாபத்துக்கேதுவேடி.

84. கள்ளங் கட்காமங் கொலைகள் கபடங்கள்
பள்ளத்திற்றள்ளுமேடி - குதம்பாய் - பள்ளத்திற்றள்ளுமேடி

85. பொருளாசையுள்ளவிப் பூமியிலுள்ளோருக்
கிருளாநரகமேடி - குதம்பாய் - இருளாநரகமேடி.

86. கற்புள்ளமாதைக்கலக்க நினைக்கினும்
வற்புள்ளபாவமேடி - குதம்பாய் - வற்புள்ளபாவமேடி.

87. தாழாமலுத்தமர் தம்மையிகழ்வது
கீழாநரகமேடி - குதம்பாய் - கீழாநரகமேடி.

88. சுத்தபிரமத்தைத் தோத்திரஞ் செய்யார்க்கு
நித்தநரகமேடி - குதம்பாய் - நித்தநரகமேடி.

89. எப்பாரும் போற்று மிறையை நினையார்க்குத்
தப்பாநரகமேடி - குதம்பாய் - தப்பாநரகமேடி.

90. பாழாகப்பூசைகள் பண்ணுமடையர்க்கே
ஏழாநரகமேடி - குதம்பாய் - ஏழாநரகமேடி.

91. காயமெடுத்தாதி கர்த்தனை யெண்ணார்க்குத்
தீயநரகமேடி - குதம்பாய் - தீயநரகமேடி.

92. அன்போடுநெற்பத்தி யாதிமேல்வையார்க்குத்
துன்பாநரகமேடி - குதம்பாய் - துன்பாநரகமேடி.

## பொய்த்தவ வொழுக்கத்தைப் பழித்தல்.

93. செங்காவிபூண்டுத் தெருவி லலைவோர்க்கு
எங்காகு நல்வழியே - குதம்பாய் - எங்காகுநல்வழியே.

94. மாத்திரைக்கோல்கொண்டு மாரீசஞ்செய்வார்க்குச்
சாத்திரமேதுக்கேடி - குதம்பாய் - சாத்திரமேதுக்கேடி.

95. வெண்ணீறு பூசியே வீதியில் வந்தோர்க்குப்
பெண்ணாசையேதுக்கேடி - குதம்பாய் - பெண்ணாசை யேது
க்கேடி.

96. ஒப்பில்லாத்தேவனை யுள்ளத்தில் வைத்தோர்க்குக்
கப்பறையேதுக்கேடி - குதம்பாய் - கப்பறையேதுக்கேடி.

97. சான்றோரெனச் சொல்லித் தத்து வந்தேர்ந்தோர்க்கு
மான்றோலேதுக்கேடி - குதம்பாய் -மான்றோலேதுக்கேடி.

98. நாடிமனத்தினை நாதன் பால்வைத்தோர்க்குத்
தாடிசடையேனோ - குதம்பாய்- தாடிசடையேனோ.

99. நாதற்குறவாகிநற்ற வஞ்சார்ந்தோர்க்குப்
பாதக்குறடுமுண்டோ - குதம்பாய் - பாதக்குறடுமுண்டோ.

100. தபநிலைகண்டாதி தன்வழிப்பட்டோர்க்குச்
செபமாலையேதுக்கேடி - குதம்பாய் - செபமாலையேதுக்கேடி

101. பங்கோடுபெங்கில்லாப் பாழ்வெளி கண்டோர்க்கு
லங்கோடேதுக்கேடி - குதம்பாய் - லங்கோடேதுக்கேடி.

## நிலையர்ப் பொருள்.

102. தேடிய செம்பொன்னுஞ் செத்தபோதுன்னோடு
நாடிவருவதுண்டோ - குதம்பாய் - நாடிவருவதுண்டோ.

103. போம்போதுதேடும் பொருளி லணுவேனுஞ்
சாம்போது தான்வருமோ - குதம்பாய் - சாம்போது தான்
வருமோ.

104. காசினிமுற்றுவுன் கைவசமாயினுந்
தூசேனும்பின்வருமோ-குதம்பாய் - தூசேனும்பின்வருமோ

105. உற்றுறுறவின ருரார்பிறந்தவர்
பெற்றார் துணையாவரோ - குதம்பாய் - பெற்றார் துணை
யாவரோ.

106. மெய்ப்பணிகொள்ளாத மேதினிமாந்தர்க்குப்
பொய்ப்பணி யேதுக்கேடி - குதம்பாய் - பொய்ப்பணி யே
துக்கேடி.

107. விண்ணாசைதன்னை விரும்பாதமக்கட்கு
மண்ணாசை யேதுக்கேடி - குதம்பாய் - மண்ணாசை யேது
க்கேடி.

108. சேனைகள்பூந்தேர் திரண்டமனுத்திரள்
யானையுமில்லாவேடி - குதம்பாய் - யானையுமில்லாவேடி.

109. செங்கோல்செலுத்திய செல்வமுமோர்காலம்
தங்காதழியுமேடி - குதம்பாய் தங்காதழியுமேடி.

110. கூடங்கள்மாடங்கள் கோபுரமாபுரம்
கூடவேவாராவேடி - குதம்பாய் - கூடவேவாராவேடி.

## தன்னோடு செல்பவை.

111. நல்வினைதீவினை நாடிப்புரிந்தோர்பால்
செல்வனிச்சயமே - குதம்பாய் - செல்வனிச்சயமே.

112. செய்தவஞ்செய்கொலை செய்தன்மந்தன்னோடும்
எய்த வருவனவே - குதம்பாய் - எய்த வருவனவே.

113. முத்தியளித்திடு மூர்த்தியைப்போற்றிசெய்
பத்தியும்பின்வருமே - குதம்பாய் - பத்தியும்பின்வருமே.

## ஆசையை யொழித்தல்.

114. இச்சைபிறப்பினை யெய்விக்குமென்றது
நிச்சயமாகுமேடி - குதம்பாய் - நிச்சயமாகுமேடி.

115. வல்லமையாகவே வாஞ்சையொழித்திட்டால்
நல்லதுறவாமேடி - குதம்பாய் - நல்லதுறவாமேடி.

116. ஆசையறுத்தோர்க்கே யானந்தமுண்டென்ற
ஓசையைக்கேட்டிலையோ - குதம்பாய் - ஓசையைக்கேட்டிலையோ.

117. தேக்கியவாசையைச் சீயென்றுறுத்தோரே
பாக்கியவான்களேடி - குதம்பாய் - பாக்கியவான்களேடி.

118. இன்பங்களெய்திட விச்சையுறுதார்க்குத்
துன்பங்களுண்டாமேடி - குதம்பாய் - துன்பங்களுண்டா
மேடி.

119. துறவிகளாசை துறந்துவிடுவரேல்
பிறவிகளில்லையேடி - குதம்பாய் - பிறவிகளில்லையேடி.

## தவநிலைக்கூறல்.

120. கொல்லாவிரதங் குளிர்பசிநீக்குதல்
நல்லவிரதமேடி - குதம்பாய் - நல்லவிரதமேடி.

121. தவநிலையொன்றனைச் சாராதமாந்தர்கள்
அவநிலையாவாரேடி - குதம்பாய் - அவநிலையாவாரேடி.

122. தவமதையெந்நாளுஞ் சாதிக்கவல்லார்க்குச்
சிவமதுகைவசமே - குதம்பாய் - சிவமதுகைவசமே.

123. காமனைவென்று கடுந்தவஞ் செய்வோர்க்கு
எமன்பயப்படுவான் - குதம்பாய் - எமன்பயப்படுவான்.

124. யோகந்தான்வேண்டி யுறுதிகொள்யோகிக்கு
மோகந்தானில்லையேடி - குதம்பாய் - மோகந்தானில்லையேடி.

125. காலங்கள்கண்டு கடிந்ததுறவோர்க்குக்
கோலங்களுண்டாமேடி - குதம்பாய் - கோலங்களுண்டா
மேடி.

126. ஐம்புலன்வென்றே யனைத்துந்துறந்தோர்கள்
சம்புவைக் காண்பாரேடி - குதம்பாய் - சம்புவைக் காண்
பாரேடி.

127. பொய்யை வெறுத்திட்டு மெய்யை விரும்பினோர்
மெய்யவராவாரேடி - குதம்பாய் - மெய்யவராவாரேடி.

128. யானெனதென்னு மிருவகைப்பற்றற்ருேன்
வானவனுவானேடி - சுதம்பாய் - வானவனுவானேடி.

129. அகம் புறமான பற்றற்ற மெய்ஞ்ஞானிக்கு
நகுபிறப்பில்லையேடி - குதம்பாய் - நகுபிறப்பில்லையேடி.

130. பற்றறிற்றுன்பமும் பற்றறுமின்பமும்
முற்ருகவெய்துமேடி - குதம்பாய் - முற்ருகவெய்துமேடி.

## அறிவு விளக்கம்.

131. பொய்ஞ்ஞானநீக்கியே பூரணஞ்சார்தற்கு
மெய்ஞ்ஞானம் வேண்டுமேடி - குதம்பாய் - மெய்ஞ்ஞானம்
வேண்டுமேடி.

132. பிறவியை நீக்கிடப் பேரின்ப நோக்கியே
அறிவுபெரிதாமேடி - குதம்பாய் - அறிவுபெரிதாமேடி.

133. சத்துவமாகவே சத்துப்பொருள்காண்டல்
தத்துவஞானமேடி - குதம்பாய் - தத்துவஞானமேடி.

134. அண்டத்தைக்கண்டதை யாக்கினேனுண்டென்ற
கண்டதறிவாமேடி - குதம்பாய் - கண்டதறிவாமேடி.

135. முக்குற்ற நீக்கமுயலு மெய்ஞ்ஞானமே
தக்கமெய்ஞ்ஞானமேடி - குதம்பாய் - தக்கமெய்ஞ்ஞான
மேடி.

136. போதமிதென்றுமெய்ப் போதநிலைகாணல்
போதமதாகுமேடி - குதம்பாய் - போதமதாகுமேடி.

## சாதிபேத மின்மை.

137. ஆண்சாதிபெண்சாதி யாருமிருசாதி
வீண்சாதி மற்றவெல்லாம் - குதம்பாய் - வீண்சாதி மற்ற
வெல்லாம்.

138. பார்ப்பார்கள் மேலென்றும் பறையர்கள் கீழென்றும்
தீர்ப்பாகச் சொல்வதென்னே - குதம்பாய் - தீர்ப்பாகச் சொ
ல்வதென்னே.

139. பார்ப்பாரைக்கர்த்தர் பறையரைப்போலவே
தீர்ப்பாய்ப்படைத்தாரேடி - குதம்பாய் - தீர்ப்பாய்ப்படைத்
தாரேடி.

140. பற்பலசாதியாய்ப் பாரில் பகுத்தது
கற்பனையாகுமேடி - குதம்பாய் - கற்பனையாகுமேடி.

141. கட்டிடுஞ்சாதிப்பேர் கட்டுச்சொல்லல்லாமல்
தொட்டிடும் வஸ்தல்லவே - குதம்பாய் - தொட்டிடும் வஸ்
தல்லவே.

142. ஆதிபரப்பிர்ம மாக்குமக்காலையில்
சாதிகளில்லையேடி - குதம்பாய் - சாதிகளில்லையேடி.

143. சாதிவேறென்றே தரம்பிரிப்போர்க்குச்
சோதிவேறாகுமேடி - குதம்பாய் - சோதிவேறாகுமேடி.

144. நீதிமானென்றே நெறியாயிருப்போனே
சாதிமானவானேடி - குதம்பாய் - சாதிமானவானேடி.

145. சாதியொன்றில்லை சமயமொன்றில்லையென்
றோதியுணர்ந்தறிவாய் - குதம்பாய் - ஓதியுணர்ந்தறிவாய்.

## சமய நிலை கூறல்.

146. தன்புத்தி தெய்வமாய்ச் சாற்றியசார்வாகம்
புன்புத்தியாகுமேடி - குதம்பாய் - புன்புத்தியாகுமேடி.

147. கல்வினைச் செம்பினைக் கட்டையைக்கும்பிடல்
புல்லறிவாகுமேடி - குதம்பாய் - புல்லறிவாகுமேடி.

148. அண்டத்தைக் கண்டு மகாதியில் லென்பவர்
கொண்டகருத்தவமே - குதம்பாய் - கொண்டகருத்தவமே.

149 பெண்ணின்ப முத்தியாய்ப் பேசும்பாடாண் மதம்
கண்ணின்மையாகுமேடி - குதம்பாய் - கண்ணின்மையாகு
மேடி.

150. சூரியன் றெய்வமாய்ச் சுட்டுஞ்சமயந்தான்
காரியமல்லவேடி - குதம்பாய் - காரியமல்லவேடி.

151. மனந்தெய்வமென்று மகிழ்ந்து கொண்டாடிய
இனமதி யீனமேடி - குதம்பாய் - இனமதி யீனமேடி.

152. பற்பலமார்க்கம் பகர்ந்திடும் வேதங்கள்
கற்பனையாகுமேடி - குதம்பாய் - கற்பனையாகுமேடி.

153. நீண்டகுரங்கை நெடியபருந்தினை
வேண்டப்பயன் வருமோ - குதம்பாய் - வேண்டப்பயன்
வருமோ.

154. மெய்த்தேவனென் றென்று வேண்டாதபன்மதம்
பொய்த்தேவைப் போற்றுமேடி-குதம்பாய்-பொய்த்தேவை
ப்போற்றுமேடி.

## மந்திர நிலை கூறல்.

155. நாற்பத்து முக்கோண நாடுமெழுத்தெலா
மேற்பற்றிக்கண்டறிநீ - குதம்பாய் - மேற்பற்றிக்கண்டறிநீ.

156. சட்கோணத்துள்ளந்தச் சண்முகவக்கரம்
உட்கோணத்துள்ளறிநீ - குதம்பாய்-உட்கோணத்துள்ளறிநீ.

157. ஐந்தெழுத் தைந்தறைக் கார்ந்திடு மவ்வாறே
சிந்தையுட் கண்டறிநீ - குதம்பாய் - சிந்தையுட் கண்டறிநீ.

## வாத நிலை கூறல்.

158. ஆறு றுகாரமு நூறுமே சேர்ந்திடில்
வீறுனமுப்பாமேடி - குதம்பாய் - வீறுனமுப்பாமேடி.

159. விந்தொடுநாதம் விளங்கத்துளங்கினல்
வந்தது வாதமேடி - குதம்பாய் - வந்தது வாதமேடி.

160. அப்பினைக் கொண்டந்த வுப்பினைக்கட்டினல்
முப்பூவாகுமேடி - குதம்பாய் - முப்பூவாகுமேடி.

161. உள்ளக் கருவியே யுண்மை வாதமன்றிக்
கொள்ளக்கிடையாதேடி-குதம்பாய்-கொள்ளக்கிடையாதேடி

162. பெண்ணுலே வாதம் பிறப்பதேயல்லாமல்
மண்ணுலே யில்லையேடி-குதம்பாய்-மண்ணுலே யில்லையேடி.

163. ஐந்துசரக்கொடு விந்துநாதஞ்சேரில்
வெந்திடும்லோகமேடி - குதம்பாய் - வெந்திடும்லோகமேடி.

## வைத்தியங் கூறல்.

164. முப்பிணிதன்னை யறியாதமூடர்கள்
எப்பிணிதீர்ப்பாரேடி - குதம்பாய் - எப்பிணிதீர்ப்பாரேடி.

165. எட்டெட்டுங் கட்டியிருக்குமேற் றீயினில்
விட்டோடு நோய்களெல்லாம் - குதம்பாய் - விட்டோடுநோ
ய்களெல்லாம்.

166. நாடியொருபது நன்காயறிந்திடில்
ஓடிவிடும்பிணியே - குதம்பாய் - ஓடிவிடும்பிணியே.

167. சத்தவகைதாது தன்னை யறிந்தவன்
சுத்தவைத்தியனே - குதம்பாய் - சுத்தவைத்தியனே.

168. வாயுவொருபத்தும் வாய்த்த நிலைகண்டோன்
ஆயுவறிவானேடி - குதம்பாய் - ஆயுவறிவானேடி.

169. ஆயுள்வேதப்படி யவிழ்தமுடித்திடில்
மாயும் வியாதியேடி - குதம்பாய் - மாயும்வியாதியேடி.

## கற்ப நிலை கூறல்.

170. பொற்பாந்த முப்பூவைப் போதப்புசித்தவர்
கற்பாந்தம் வாழ்வாரேடி - குதம்பாய் - கற்பாந்தம் வாழ்வா
ரேடி.

171. வேவாதமுப்பூவை வேண்டியுண்டார்பாரில்
சாவாமல்வாழ்வாரேடி - குதம்பாய் - சாவாமல்வாழ்வாரேடி

172. விந்துவிடார்களே வெய்யசுடலையில்
வெந்துவிடார்களேடி - குதம்பாய் - வெந்துவிடார்களேடி.

173. தொல்லேச்சடம்விட்டுச் சுட்டச்சடங்கொண்டோர்
எல்லேயில்வாழ்வாரேடி - குதம்பாய் - எல்லேயில்வாழ்வாரேடி.

174. தோற்பையைநீக்கிநற் சோதிப்பைக்கொண்டவர்
மேற்பைநஞ்சுண்பாரேடி - குதம்பாய் - மேற்பைநஞ்சுண்பா ரேடி.

175. மாற்றினேயேற்றவ யங்குமெய்யோர்களே
கூற்றினேவெல்வாரேடி - குதம்பாய் - கூற்றினேவெல்வாரேடி.

## ஸ்தலங்களிலைவயெனல்.

176. கோயில்பலதேடிக் கும்பிட்டதாலுனக்
கேயும்பலன்வருமோ - குதம்பாய் - ஏயும்பலன்வருமோ.

177. சித்தத்தலம்போலத் தெய்வமிருக்கின்ற
சுத்தத்தலங்களுண்டோ - குதம்பாய் - சுத்தத்தலங்களுண்டோ

178. மெய்த்தலத்தில்லாத மெய்ப்பொருளானவர்
பொய்த்தலத்தெய்வமுண்டோ - குதம்பாய் - பொய்த்தலத் தெய்வமுண்டோ.

179. சிற்பர்கள்கட்டுங் திருக்கோயிலுள்ளாகத்
தற்பரம் வாழ்வதுண்டோ - குதம்பாய் - தற்பரம் வாழ்வது ண்டோ.

180. தன்னுலுண்டாஞ்சிஷ்டி தன்னுலேசிஷ்டித்த
புன்கோயி லுள்ளவன்யார் - குதம்பாய் - புன்கோயி லுள் ளவன்யார்.

181. அன்பானபத்தரகக் கோயில்கர்த்தர்க்கே
இன்பானகோயிலடி - குதம்பாய் - இன்பானகோயிலடி.

## தேவனிலையறிதல்.

182. தன்னுள்விளங்கிய சம்புவைக்காணாது
மன்னுந்தலத்தெய்வதென் - குதம்பாய் - மன்னுந்தலத்தெய்வதென்.

183. இருந்தவிடத்தி லிருந்தேயறியாமல்
வருந்தித் திரிவதென்னே - குதம்பாய் - வருந்தித் திரிவதென்னே.

184. காசிராமேச்சுரம் காணவேச்சென்றாலும்
ஈசனைக்காணுவையோ - குதம்பாய் - ஈசனைக்காணுவையோ.

185. பூவலநாளும் பொருந்தித்திரியினும்
தேவனைக் காணுவையோ - குதம்பாய் - தேவனைக் காணுவையோ.

186. உள்ளங்கால்வெள்ளெலும் பாகவுலாவினும்
வள்ளலைக் காணுவையோ - குதம்பாய் - வள்ளலைக் காணுவையோ.

187. போரினிலூசி பொறுக்கத்துணிதல்போல்
ஆரியற்றேடுதலே - குதம்பாய் - ஆரியற்றேடுதலே.

188. சாதனையாலே தனிப்பதஞ்சாரார்க்கு
வேதனையாகுமேடி - குதம்பாய் - வேதனையாகுமேடி.

189. வேதனைநீங்க விடாதுதொடர்ந்தோரே
நாதனைக்காணுவர்காண் - குதம்பாய்-நாதனைக்காணுவர்காண்.

190. நாடிவழக்க மறிந்துசெறிந்தவர்
நீடொளிகாணுவரே - குதம்பாய் - நீடொளிகாணுவரே.

## அஞ்ஞானம் கடிதல்.

191. மீளாவியாதியின் மேன்மேலுநொந்தார்க்கு
நாளேதுகோளேதடி - குதம்பாய் - நாளேதுகோளேதடி.

192. திட்டாலுடம்பு திறங்கொண்டிருக்கையில்
திட்டென்றுசொல்வதென்னே - குதம்பாய்-திட்டென்றுசொல்வதென்னே.

193. செத்தபின்சாப்பறை செத்தார்க்குச்சேவித்தால்
சத்தமறிவாரேடி - குதம்பாய் - சத்தமறிவாரேடி.

194. தந்தைதாய்செய்வினை சந்திக்காமென்பார்
சிந்தைதெளிந்திலரே - குதம்பாய் - சிந்தைதெளிந்திலரே.

195. பிள்ளைகள் செய்தன்மம் பெற்றூர்க்குறுமென்றல்
வெள்ளறிவாகுமேடி - குதம்பாய் - வெள்ளறிவாகுமேடி.

196. பந்தவினைக்கீடாய்ப் பாரிற்பிறந்தோர்க்குச்.
சொந்தமதில்லையேடி - குதம்பாய் - சொந்தமதில்லையேடி.

197. பார்ப்பார்சடங்கு பலனின்றுபாரிலே
தீர்ப்பாகவெண்ணேடி - குதம்பாய் - தீர்ப்பாகவெண்ணேடி.

198. அந்தணர்க்காவை யளித்தோர்களாவிக்குச்
சொந்தமோ முத்தியேடி - குதம்பாய் - சொந்தமோ முத்தியேடி.

199. வேதியர்கட்டிய வீணனவேதத்தைச்
சோதித்துத்தள்ளேடி - குதம்பாய் - சோதித்துத் தள்ளேடி.

200. தன்பாவநீக்காத தன்மையர்மற்றவர்
வன்பாவநீக்குவரோ - குதம்பாய் - வன்பாவநீக்குவரோ.

201. வேள்வியிலாட்டினை வேவச்செய்துண்போர்க்கு
மீள்வழியில்லையேடி - குதம்பாய் - மீள்வழியில்லையேடி.

202. வேதம்புராணம் விளங்கியசாஸ்திரம்
போதனையாகுமேடி - குதம்பாய் - போதனையாகுமேடி.

203. யாகாதிகன்மங்கள் யாவுஞ்சடங்குகள்
ஆகாதசெய்கையேடி - குதம்பாய் - ஆகாதசெய்கையேடி.

204. சாற்றுஞ்சகுனங்கள் சந்தியாவந்தனம்
போற்றுமறிவீனமே - குதம்பாய் - போற்றுமறிவீனமே.

205. ஆனதோர்நாளென்ற லாகாதநாளென்றல்
ஞானமில்லாமையேடி - குதம்பாய் - ஞானமில்லாமையேடி

206. அஞ்சனமென்ற தறியாமலேய்க்குதல்
வஞ்சனையாகுமேடி - குதம்பாய் - வஞ்சனையாகுமேடி.

207. மாயவித்தைபல மாநிலத்திற்செய்கை
தீயதொழிலாமேடி - குதம்பாய் - தீயதொழிலாமேடி.

208. கருவையழித்துக் கன்மத்தொழில்செய்குதல்
திருவையழிக்குமேடி - குதம்பாய் - திருவையழிக்குமேடி.

209. மாரணஞ்செய்துபன் மாந்தரைக்கொல்வது
சூரணமாக்குமேடி - குதம்பாய் - சூரணமாக்குமேடி.

210. பொய்யானசோதிடர் பொய்மொழியாவுமே
வெய்யமயக்கமேடி - குதம்பாய் - வெய்யமயக்கமேடி.

211. மெய்க்குறிகண்டு விளங்கவறியார்க்குப்
பொய்க்குறி யேதுக்கேடி - குதம்பாய் - பொய்க்குறி யே
துக்கேடி.

212. நாயாட்டமாடி நகைத்துழன்மூடர்க்குப்
பேயாட்டமேதுக்கேடி - குதம்பாய் - பேயாட்டமேதுக்கேடி

213. மந்திரமூலம் வகுத்தறியாதார்க்குத்
தந்திரமேதுக்கேடி - குதம்பாய் - தந்திரமேதுக்கேடி.

214. வாதமென்றேபொய்யை வாயிற்புடைப்போர்க்குச்
சேதமிகவருமே - குதம்பாய் - சேதமிகவருமே.

215. வெட்டவெளிதன்னை மெய்யென்றிருப்பார்க்குப்
பட்டயமேதுக்கேடி - குதம்பாய் - பட்டயமேதுக்கேடி.

216. மெய்ப்பொருள்கண்டு விளங்குமெய்ஞ்ஞானிக்குக்
கற்பங்களேதுக்கேடி - குதம்பாய் - கற்பங்களேதுக்கேடி.

217. காணமற்கண்டு கருத்தோடிருப்பார்க்கு
வீணைசையேதுக்கேடி - குதம்பாய் - வீணைசையேதுக்கேடி.

218. வஞ்சமற்று வழிதனைக்கண்டோர்க்குச்
சஞ்சலமேதுக்கேடி - குதம்பாய் - சஞ்சலமேதுக்கேடி.

219. ஆதாரமான வடிமுடிகண்டோர்க்கு
வாதாட்டமேதுக்கேடி - குதம்பாய் - வாதாட்டமேதுக்கேடி

220. நித்திரைகெட்டு நினைவோடிருப்பார்க்கு
முத்திரையேதுக்கேடி - குதம்பாய் - முத்திரையேதுக்கேடி

221. தந்திரமான தலந்தனினிற்போர்க்கு
மந்திரமேதுக்கேடி - குதம்பாய் - மந்திரமேதுக்கேடி.

222. சத்தியமான தவத்திலிருப்போருக்
குத்தியமேதுக்கேடி - குதம்பாய் - குத்தியமே துக்கேடி.

223. நாட்டத்தைப்பற்றி நடுவணைச்சேர்வோர்க்கு
வாட்டங்களேதுக்கேடி - குதம்பாய் - வாட்டங்களேதுக்கேடி.

224. முத்தமிழ்கற்று முயங்குமெய்ஞ்ஞானிக்குச்
சத்தங்களேதுக்கேடி - குதம்பாய் - சத்தங்களேதுக்கேடி.

225. உச்சிக்குமேற்சென் றுயர்வெளிகண்டோர்க்
கிச்சிப்பிங்கேதுக்கேடி - குதம்பாய்- இச்சிப்பிங்கேதுக்கேடி.

226. வேகாமல்வெந்து வெளியொளிகண்டோர்க்கு
மோகந்தானேதுக்கேடி -குதம்பாய்-மோகந்தானேதுக்கேடி.

227. சாகாமற்சூண்டித் தனிவழிபோவார்க்கே
ஏகாந்தமேதுக்கேடி - குதம்பாய் - ஏகாந்தமேதுக்கேடி.

228. அந்தரந்தன்னி லசைந்தாடுமுத்தர்க்குத்
தந்திரமேதுக்கேடி - குதம்பாய் - தந்திரமேதுக்கேடி.

229. ஆனந்தம்பொங்கி யறிவோடிருப்பார்க்கு
ஞானந்தானேதுக்கேடி - குதம்பாய்- ஞானந்தானேதுக்கேடி

230. சித்திரகூத்தைத் தினந்தினங்காண்போர்க்குப்
பத்திரமேதுக்கேடி - குதம்பாய் - பத்திரமேதுக்கேடி.

231. முக்கோணந்தன்னின் மூளைத்தமெய்ஞ்ஞானிக்கு
சட்கோணமேதுக்கேடி - குதம்பாய்-சட்கோணமேதுக்கேடி.

232. அட்டதிக்கெல்லா மசைந்தாடுநாதர்க்கு
நட்டணையேதுக்கேடி - குதம்பாய் - நட்டணையேதுக்கேடி.

233. முத்திபெற்றுள்ள முயங்குமெய்ஞ்ஞானிக்குப்
பத்தியமேதுக்கேடி - குதம்பாய் - பத்தியமேதுக்கேடி.

234. அல்லலைநீக்கி யறிவோடிருப்பார்க்குப்
பல்லாக்கேதுக்கேடி - குதம்பாய் - பல்லாக்கேதுக்கேடி.

235. அட்டாங்கயோக மறிந்தமெய்ஞ்ஞானிக்கு
முட்டாங்கமேதுக்கேடி - குதம்பாய்-முட்டாங்கமேதுக்கேடி.

236. வேகமடக்கி விளங்குமெய்ஞ்ஞானிக்கே
யோகந்தானேதுக்கேடி-குதம்பாய் - யோகந்தானேதுக்கேடி.

237. மாற்றானைவென்று மலைமேலிருப்பார்க்குப்
பூத்தானமேதுக்கேடி - குதம்பாய் - பூத்தானமேதுக்கேடி.

238. செத்தாரைப்போலே திரியுமெய்ஞ்ஞானிக்குக்
கைத்தாளமேதுக்கேடி - குதம்பாய் - கைத்தாளமேதுக்கேடி

239. கண்டாரைநோக்கிக் கருத்தோடிருப்பார்க்குக்
கொண்டாட்ட மேதுக்கேடி - குதம்பாய் கொண்டாட்ட மே
துக்கேடி.

240. காலனைவென்று கருத்தறிவாளர்க்குக்
கோலங்களேதுக்கேடி - குதம்பாய் - கோலங்களேதுக்கேடி.

241. வெண்காயமுண்டு மிளகுண்டுசுக்குண்டோர்க்
குண்காயமேதுக்கேடி - குதம்பாய் - உண்காயமேதுக்கேடி.

242. மாங்காய்ப்பாலுண்டு மலைமேலிருப்பார்க்குத்
தெங்காய்ப்பாலேதுக்கேடி - குதம்பாய் - தேங்காய்ப்பாலே
துக்கேடி.

243. பட்டணஞ்சுற்றி பகலேதிரிவார்க்கு
முட்டாக்கேதுக்கேடி - குதம்பாய் - முட்டாக்கேதுக்கேடி.

244. தாழ்வாரமில்லை தனக்கொருவீடில்லைத்
தேவாரமேதுக்கேடி - குதம்பாய் - தேவாரமேதுக்கேடி.

245. தன்னையறிந்து தலைவனைச்சேர்ந்தோர்க்குப்
பின்னுசையேதுக்கேடி-குதம்பாய் - பின்னுசையேதுக்கேடி.

246. பத்தாவுந்தானும் பதியோடிருப்பாருக்
குத்தாரமேதுக்கேடி - குதம்பாய் - உத்தாரமேதுக்கேடி.

குதம்பைச்சித்தர்பாடல்

முற்றிற்று.



# அருப்பொருளகராதி.

| பாடல். | | |
|---|---|---|
| | குதம்பை | ஆபரணம். |
| | குதம்பாய் | ஆபரணத்தையுடையவளே. |
| | இலகும் | பிரகாசிக்கும். |
| | நலமார் | நன்மைநிறைந்த. |
| | நிதம் | நித்தியம். |
| 1 | பூரணம் | சர்வவியாபகம், அகண்டம். |
| 4 | மாட்சி | நற்குணம், நற்செய்கை. |
| 5 | பற்றற்றவஸ்து | சார்தலற்றவஸ்து. |
| 6 | காட்சி | தரிசனம். |
| 6 | அகாட்சி | அதரிசனம். |
| 10 | ஆவித்துணை | உயிர்த்துணை. |
| 13 | இணையடி | இருபாதம். |
| 14 | விண்ணொளி | பரமஒளி=சூரியன். |
| 14 | கண்ணொளி | நேத்திரபிரகாசம். |
| 16 | பாமரம் | அஞ்ஞானம். |
| 18 | கற்பாந்தகம்பம் | கற்பம்=காலம்.அந்தம்=முடிவு கம்பம்=ஸ்தம்பம். |
| 19 | பல்லண்டம் | பல உலகம். |
| 22 | சத்து | நித்தியபொருள். |
| 22 | சித்து | அறிவுப்பொருள். |
| 23 | திருவாகி | அழகாய், திவ்வியம். |
| 24 | பார் | பூமி. |
| 27 | ஆரணம் | வேதம். |
| 36 | பொங்கமாய் | பிரகாசமாய். |
| 40 | சின்னங்கள் | அடையாளங்கள். |
| 42 | உற | பொருந்த. |
| 44 | பிர்மம் | கடவுள். |
| 48 | தாணு | நிலை கடவுள். |
| 49 | முத்தொழில் | சிருஷ்டி திதி சங்காரம். |

| பாடல். | | | |
|---|---|---|---|
| 53 | பந்தம் | ... | பாசம். |
| 53 | சந்ததம் | ... | எப்போதும். |
| 56 | அந்தக்கரணம் | ... | மனசு. |
| 59 | கற்ரு | ... | இளங்கன்றையுடையபசு. |
| 60 | காசறு | ... | குற்றமற்ற. |
| 60 | சொக்கினுல் | ... | பரவசப்பட்டால். |
| 68 | ஆயுவது | ... | விசாரிப்பது. |
| 71 | நெடுவரை | ... | நீண்ட பருவதம். |
| 71 | கனதனம் | ... | பருத்ததனம். |
| 74 | கழறும் | ... | பேசும். |
| 76 | பொருக்கு | ... | மலினம், அழுக்கு. |
| 78 | மஞ்சு | ... | மேகம். |
| 79 | ஆடி | ... | கண்ணுடி. |
| 81 | மொய்ம்பு | ... | பலம். |
| 83 | கொடுஞ்சொல் | ... | குரூரமான வார்த்தை. |
| 83 | வன்கோள் | ... | கடினமான புறங்கூறல். |
| 94 | மாத்திரைக்கோல் | ... | யோகதண்டங்களிலொன்று. |
| 94 | மாரீசம் | ... | மாயம். |
| 95 | வெண்ணீறு | ... | வெண்மையாகியவிபூதி. |
| 97 | சான்ருேர் | ... | பெரியோர்கள். |
| 110 | கூடங்கள் | ... | வீடுகள். |
| 110 | மாடங்கள் | ... | வீடுவாசல்கள், மண்டபங்கள். |
| 112 | எய்த | ... | அடைய. |
| 114 | எய்விக்கும் | ... | சேர்ப்பிக்கும். |
| 116 | தேக்கிய ஆசை | ... | மிகுந்த ஆசை. |
| 118 | துறவிகள் | ... | சன்னியாசிகள். |
| 120 | கொல்லாவிரதம் | ... | கொலைசெய்யாவிரதம். |
| 121 | தவநிலை | ... | கடவுள்நிலை. |
| 121 | அவநிலை | ... | ஆதாரமற்றநிலை. |

| பாடல். | | |
|---|---|---|
| 122 | சிவம் ... | மோட்சம். |
| 125 | துறவோர்க்கு ... | ஞானிகளுக்கு. |
| 126 | ஐம்புலன் ... | சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். |
| 127 | மெய் ... | சரீரம். |
| 127 | மெய் ... | உண்மை. |
| 129 | அகம்புறம் ... | உள்ளும், வெளியும். |
| 133 | சத்துவம் ... | சற்குணம். |
| 135 | முக்குற்றம் ... | காமம், வெகுளி, மயக்கம். |
| 136 | போதம் ... | அறிவு, ஞானம். |
| 140 | கற்பனை ... | பொய். |
| 141 | கட்டுச்சொல் ... | கட்டுக்கதை. |
| 146 | புன்புத்தி ... | புத்தியீனம். |
| 156 | ஷண்முகவக்கரம் ... | சடாக்ஷரவெழுத்து ச-ர-வ-ண-ப-வ. |
| 157 | ஐஞ்செழுத்து ... | ந-ம-சி-வ-ய. |
| 159 | விந்துநாதம் ... | ஆண் பெண் இந்திரியங்கள். |
| 160 | அப்பு ... | ஜலம். |
| 163 | ஐந்து சரக்கு ... | பஞ்சபூதமாகிறசரக்கு. |
| 164 | முப்பிணி ... | வாத-பித்த-சிலேத்துமம். |
| 165 | எட்டெட்டு ... | அறுபத்துநாலுசரக்கு. |
| 166 | நாடியொருபது ... | பத்துநாடி. |
| 167 | சத்தவகைதாது ... | எழுவகைதாது. |
| 169 | ஆயுள்வேதம் ... | வைத்தியசாஸ்திரம். |
| 170 | பொற்பாந்தம் ... | பேரழகு. |
| 170 | கற்பாந்தம் ... | கற்பமுடிவு. |
| 170 | முப்பூ ... | மூன்றுபூ, உழமண். |
| 173 | தொல்லை ... | பழமை. |
| 174 | தோல்பை ... | உடம்பு. |

| பாடல். | | |
|---|---|---|
| 174 | சோதி ... | ஒளி. |
| 175 | மாற்று ... | பொன்னின் அளவு |
| 179 | சிற்பர்கள் ... | கல்தச்சன். |
| 182 | சம்பு ... | கடவுள். |
| 185 | பூவலம் ... | பூமிபிரதக்ஷணம். |
| 186 | வள்ளல் ... | கடவுள். |
| 187 | ஆரியர் ... | குருமார். |
| 195 | வெள்ளறிவு ... | கொஞ்சபுத்தி. |
| 201 | வேள்வி ... | யாகம். |
| 204 | சந்தியாவந்தனம் ... | பிராமணர் செய்யும் காலை பகல் மாலை அனுஷ்டானம். |
| 206 | அஞ்சனம் ... | மாந்திரீகர் கண்ணிலிட்டுக் கொள்ளும் மை. |
| 209 | மாரணம் ... | சூனியம், கொலை. |
| 215 | பட்டயம் ... | வாள். |
| 222 | உத்தியம் ... | ஓர் யாகம். |
| 223 | நடுவணை ... | புருவமத்தி. |
| 224 | முத்தமிழ் ... | இயல், இசை, நாடகம். |
| 231 | முக்கோணம் ... | மூன்றுகோணமுள்ள ஓர் உருப்பு. |
| 231 | சட்கோணம் ... | ஆறுகோணம். |
| 232 | நட்டணை ... | கேலி, பரியாசம். |
| 237 | பூத்தானம் ... | அருமைபண்ணல். |
| 242 | மாங்காய்ப்பால் ... | அமிர்தம். |
| 243 | முட்டாக்கு ... | முக்காடு. |
| 235 | முட்டாங்கம் ... | முழுஅங்கம்மூடுதல். |
| 235 | மாற்றுன் ... | சத்துரு |
| 235 | கோலம் ... | அழகு. |

# அட்டவணை.